# லவன்

அல்லது

# வீரச்சிறுவன்

பள்ளத்தூர் - அருணாசலம் செட்டியார் ஹைஸ்கூல்
உபாத்தியாயர்

S. ஸதாசிவம்

எழுதியது






சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1925

 [விலை 2 அணா.

# FOREWORD

It is with a feeling of genuine pleasure that I respond to the request of my friend and Co-member of the staff Mr. S. Sadasivam to write this foreword for his small and interesting book. After a close and careful perusal of "Lava," I am glad to be able to say that it is marked by lucidity of treatment, appropriateness of expression and simplicity of style. It should be the endeavour of all institutions to encourage in the pupils the development of a good, simple and idiomatic prose style in their vernaculars, and thus attempt to remove the stigma that our literature suffers from deficiency of prose. "Lava" in my opinion, like its compeers, in the field removes a longfelt want by supplying a book which treats of a classical subject and which is written in simple chaste Tamil. I fervently hope that it will be prescribed as a non-detailed Text Book in all the Secondary Schools of the Tamil Nadu, and thus practical encouragement be given to the energetic publishers of this volume for the production of similar books in Tamil

M. G. GURUSWAMY IYAR, M. A., L. T.,
*Headmaster,*
*Arunachalam Chettiar's High School, Pallatur.*

# லவன் அல்லது வீரச்சிறுவன்

## 1. இரட்டைப் பிள்ளைகள்

முன் ஒரு காலத்தில் இரண்டு சிறு சகோதரர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு லவன், குசன் என்று பெயர். அவர்கள் இரட்டைப் பிள்ளைகள். குசன், லவனுக்குச் சிறிது நேரம் முன்னே பிறந்தவன். ஆகையால், லவன் அவனை அண்ணா என்று அழைத்து வந்தான்.

அவர்கள் ஒரு காட்டில் வசித்து வந்தார்கள். அவர்கள் தங்கள் சிறு குடிசைக்கு வெளியிலுள்ள புல் வெளியில் விளையாடுவது வழக்கம். அவர்களுடைய சிறு வீட்டிற்கு எதிரில் ஒரு சிறு மலையோடை ஓடிக் கொண்டிருந்தது. அந்த ஓடை ஆழமில்லாமலும், அச் சிறு பையன்கள் சுலபமாய்க் கடந்து செல்லும் படியாகவும் இருந்தது. ஓடைக்கு அக் கரையில் உயர்ந்த மரங்களுள்ள ஒரு தோட்டமும், ஒரு அடர்ந்த காடும் இருந்தன.

அந்தப் பிள்ளைகள் வசித்துவந்த குடிசையில் ஒரு கிழவர் இருந்தார். அவர் அப் பையன்களைக் கவனித்து வந்தார். கிழப்பருவத்தால் அவர் தலைமயிர் வெள்ளி போல் வெளுத்திருந்தது. அவர் மிகவும் கற்றவர். அவர் ஒரு பெரிய ரிஷி. அவர் பெயர் வால்மீகி. அச் சிறு சகோதரர்கள் அவரைப் பாட்டனார் என்று அழைத்து வந்தார்கள். அவருக்கு மனைவியாவது குழந்தைகளாவது கிடையாது. உண்

மையில் அவர் விவாஹமே செய்து கொள்ளவில்லை. குழந்தைப் பருவமுதல் அவர் அக் குழந்தைகளை வளர்த்தவ ராகையால், அவர்கள் இயற்கையாக அவரைப் பாட்டனார் என்று அழைத்து வந்தார்கள். இப் பையன்கள் யாரென்று அறிய நீங்கள் விரும்பு வீர்களென்று நான் நினைக்கிறேன்.

---

## 2. சிறுவர்களின் பிறப்பு

ராமாயண மானது சூரிய வம்சத்து அரசனான ராமருடைய கதையைச் சொல்லுகிற தென்றும், வால்மீகியானவர் அதைச் சுலோகங்களாக எழுதினாரென்றும் உங்களுக்குத் தெரியும்.

ராமர் அயோத்தியில் அரசராக முடிதரித்துக் கொண்ட பொழுது, ராஜ்யத்தில் அனேக ஜனங்கள் சந்தோஷ மடைந்தார்கள். அவர் ராக்ஷஸ ராஜனான ராவணனைக் கொன்று, வெற்றியோடு சீதையைத் திரும்பக் கொண்டுவந்தார். ஆனால், அயோத்தியில் ராமரிடத்தில் விருப்ப மில்லாத அனேகம் கெட்ட மனிதர்கள் இருந்தார்கள். கெட்டவனான ராவணனால் இலங்கையில் சீதையானவள் சிறைவைக்கப்பட்டிருந்த படியால், அவளோடு மறுபடியும் ராமர் வசிப்பது தப்பிதம் என்று அவர்கள் சொன்னார்கள். ஆகையால், அவர்களைச் சந்தோஷப்படுத்துவதற்காக ராமர் அவளை மறுபடியும் காட்டிற்கு அனுப்பி விட்டார். இப்படிக் கொடுமையாகக் காட்டில் விடப்பட்ட பொழுது சீதை பிரசவிக்கும் தருணத்தி லிருந்தாள்.

அங்கு வந்து தன்னைக் காப்பாற்றும்படி தன்னுடைய தாய்க்கு அவள் முறையிட்டுக் கொண்டாள். அவளுடைய தாய்தான் பொறுமையுள்ள பூமாதேவி. அவள் மேலே வந்து சீதையைப் பாதாள உலகத்திற்கு அழைத்துக்கொண்டு போய், அங்கு அவளோடு ஒரு குகையில் வசித்து வந்தாள்.

அதிசீக்கிரத்தில் சீதை இரண்டு குழந்தைகளுக்குத் தாயானாள். அவர்கள் ஆண் பிள்ளைகள். அவர்களுடைய அழகிய முகங்களைப் பார்த்தபொழுது, சீதை தன்னுடைய துக்கத்தை மறந்தாள். அவர்கள் அவளுக்கு இஷ்ட தெய்வம்போல ஆனந்தத்தை விளைவித்தார்கள். அவள் அவர்களை மறுபடியும் மறுபடியும் முத்தமிட்டுத் தன்னுடைய துக்கத்தை மறந்து விடுவாள். குழந்தைகள் சிறு பையன்களாக வளர்ந்தவுடன், அவர்கள் இவ்வுலகத்திற்குக் கொண்டுவரப்பட்டார்கள். அவர்களுடைய தாயார் அவர்களுக்கு நல்ல வித்தை கற்றுக்கொடுக்க விரும்பினாள். அவள் அவர்களை வால்மீகி ரிஷியின் பொறுப்பில் விட்டாள். அவர் அவர்களைத் தன் குழந்தைகள்போல் வளர்த்து வந்தார். அச் சகோதரர்கள் ஏழு வருஷம் தங்கள் குருவினிடத்தில் இருந்தார்கள். உண்மையான க்ஷத்திரியனுக்குரிய வித்தைகளிலும் கடமைகளிலும் அவர்கள் நன்றாய்ப் பயிற்றுவிக்கப்பட்டார்கள். வால்மீகி அவர்கள் புத்திசாலிகளா யிருப்பதைப் பார்த்து, அவர்களுக்கு, தான் எழுதிய ராமாயணத்தைப் பாடக் கற்றுக்கொடுத்தார். தாங்கள் பாடும் கதையின் கதாநாயகியான சீதைதான் தங்களுடைய தாயார் என்று அவர்கள் ஒருவருக்கும் தெரியாது.

## 3. யாக குதிரை

ஒருநாள் லவன் தன் தோழர்களோடு ஆற்றின் அருகில் விளையாடிக்கொண் டிருந்தான். அந்தச் சிறு கூட்டத்தில் சுமார் பன்னிரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் அங்கு வசிக்கும் ரிஷி களின் குமாரர்கள். மற்றும் சிலர் தங்களுடைய குருவின் ஹோமத்திற்குச் சமித்து பொறுக்கக் காட்டிற்குள் போயிருந்தார்கள்.

சிக்கிரத்தில் லவனும் அவனுடைய சிநேகிதர் களும் ஒரு சத்தத்தைக் கேட்டார்கள். அது எதிரி லிருந்த காட்டிலிருந்து வந்தது. அவர்கள் கவனிக் கையில் அந்தச் சத்தம் அதிகமாயிற்று. சில நிமிஷங் களில் அவர்களுடைய நேசர்கள் 'ஒரு பூதம்! ஒரு பூதம்!' என்று கத்திக் கொண்டே காட்டிலிருந்து அவர்களை நோக்கி விரைந்து ஓடி வந்தார்கள். அவர் களில் ஒருவன் லவனிடம் ஓடி 'ஓ நண்பனே, நாங்கள் இப்போதுதான் ஒரு அதிசயமான பிராணியைக் கண்டோம். அது ஒரு பூதம்போல் தோன்றுகிறது' என்று திணறிக் கொண்டே சொன்னான். லவன் 'அது எப்படிக் காணப்படுகிறது?' என்று கேட்டான். அதற்கு அப்பையன் 'அதன் முதுகின் பின் சதா ஆடிக்கொண்டிருக்கிற ஒரு வால் இருக்கிறது. வாலின் நுனியில் அடர்ந்த மயிர்க் குஞ்சம் இருக்கிறது. அதற்கு நீண்ட கழுத்தும் நான்கு குளம்புகளும் இருக் கின்றன. எவ்வளவு விநோதம்! அது புல் சாப்பிடு கிறது. மாங்காயளவு பெரிய உருண்டையாய் லத்தி போடுகிறது. நண்பனே, வா; நாம் ஓடிப்போய்

அதைப் பார்ப்போம். இல்லாவிடில், அது போய் விடும்' என்று சொன்னான்.

அப்படிச் சொல்லிக்கொண்டே அப் பையன் லவனுடைய கைகளைப் பிடித்து அவனை இழுத்துக் கொண்டு சென்றான். 'அது ஒரு குதிரைதான் என்று நான் நிச்சயமாய் நினைக்கிறேன். புஸ்தகங்களெல்லாம் குதிரையை அப்படித்தான் விவரிக்கின்றன' என்று லவன் சொன்னான். அப் பையன்கள் அவனைக் காட்டிற்குள் அழைத்துச் சென்றார்கள். ஒரு அழகிய குதிரையின் பின் அனேகம் யுத்தவீரர்கள் வருவதை ஆச்சரியத்தோடு லவன் கண்டான். அது ஒரு கம்பீரமான மிருகம். அதன் நிறம் பால்போல் வெளுப்பாயிருந்தது. அதன் முதுகு ஒரு தங்க ஜரிகைத் துணியால் மூடப்பட்டு இருந்தது. அதன் கடிவாளம் வெள்ளியால் செய்தது. இனிமையான புஷ்பங்களால் செய்த ஒரு ஹாரமானது அதன் கழுத்தில் தொங்கிக்கொண் டிருந்தது.

அதைக் கண்டவுடன் லவன் 'ஓ! என் சிநேகிதர்களே, இது பூதமல்ல, யாக குதிரை. ஆஹா, இது எவ்வளவு அழகாகக் காணப்படுகிறது! இங்கே நம்மிடத்தில் இதுபோன்ற குதிரை ஒன்று இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன்' என்று ஆச்சரியத்துடன் கத்தினான். அந்த ஆச்சிரமச் சிறுவர்களில் ஒருவன் லவனை நோக்கி 'சிநேகிதனே, நீ அது ஒரு குதிரை என்று எப்படி அறிந்துகொண்டாய். அது ஒரு யாகத்திற்காக வைக்கப்பட் டிருக்கிறதென்று நீ சொல்லுகிறாய். ஒருவரும் சொல்லாமலே இதை அறிந்துகொள்ள, நீ எவ்வளவு புத்திசாலியா

யிருக்கவேண்டும்' என்று சொன்னான். அதற்கு லவன், 'அதைப்பற்றி நம்முடைய புஸ்தகங்களில் படித்தது உனக்கு ஞாபகமில்லையா. சில தினங்களுக்கு முன்புதானே நம்முடைய குரு அதைப்பற்றியெல்லாம் நமக்குச் சொன்னார்' என்று சாந்தமாகப் பதில் சொன்னான். பையன்களெல்லோரும் ஆச்சரியத்தினால் வாய் திறந்தவண்ணமாகவே நின்றார்கள்.

போர்வீரர்கள் சீக்கிரத்தில் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் ஒருவன் ஒரு கொடியைத் தூக்கிக்கொண்டு வந்தான். அதை அவன் அசைத்துக்கொண்டே 'இந்தக் குதிரையையும், கொடியையும் பற்றி ஜாக்கிரதையாய் இருங்கள். இவைகள், ராவணனை சம்ஹரித்தவரும், உலகத்தில் உண்மையில் ஒரே வீரனென்று பெயர்பெற்றவருமான ஸ்ரீராமருக்குச் சொந்தமானவை' என்று கத்தினான்.

இந்த வார்த்தைகளை லவன் கேட்டான். கோபத்தினால் அவன் கண்கள் சிவந்தன. 'உலகமானது வீரர்களற்றுப் போய்விட்டதா? இப் பயல்கள் ஏன் இவ்விதம் கத்துகிறார்கள்?' என்று சொன்னான். அதற்கு அக் கூட்டத்தின் தலைவன் 'நீ யாரடா வீண் பயல்? மற்ற கத்துக்குட்டி வீரர்களெல்லோரும் எங்கள் எஜமானன் முன் எம்மாத்திரம்' என்று பரிகாசத்துடன் பதில் சொன்னான். பிறகு அவர்கள் கோபங்கொண்டு ஒருவர்க்கொருவர் கடுமையான மொழிகளைக் கூறினார்கள்.

அப்போது லவன் 'போங்களடா போக்கிரிகளா! அவர்கள் பயங்கொள்ளிகளாயிருந்தால் இருக்கட்டும்.

உங்களுடைய கடுமையான கூக்குரல்களை நிறுத்துங்கள்! பாருங்கள், இப்போதே உங்களுடைய கொடியை நான் பிடுங்கிக் கொள்ளுகிறேன்' என்று சொன்னான். அதற்கு அத் தலைவன் 'முட்டாள் பையனே, நில்; எங்களுடைய ஆயுதங்களைப் பார். அவைகள் எவ்வளவு கூர்மையாய் இருக்கின்றன? நீ சமீபத்தில் வந்தால் அதற்காகப் பிறகு வருத்தப் படுவாய். பார், அதோ எங்களுடைய தலைவர் தைரியவானான சந்திரகேது வருகிறார். அவர் இங்கு வருவதற்கு முன் ஓடி ஒளிந்துகொள். இல்லாவிடில் உனக்குக் கெடுதலாய் முடியும்' என்று சொன்னான்.

அந்த ஆச்சிரமச் சிறுவர்களெல்லோரும் பயந்து விட்டார்கள். அந்தப் போர்வீரர்களின் பளபளப்பான ஆயுதங்களைப் பார்த்து, தங்களுடைய உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காக சிறுவர்களெல்லோரும் ஓடிப்போய் விட்டார்கள்.

ஆனால் லவன் அதைரியப்படவில்லை. கோபத்தினால் இரத்தம் முகத்திற்கேற அவன் அவர்களை நோக்கி, 'உங்கள் கத்திகளைக் கொண்டு ஆடம்பரம் செய்வதெல்லாம் வீண்தான். அவைகளை உறைக்குள் போடுங்கள். இல்லாவிடில் என்னுடைய வில்லினாலும் அம்புகளாலும் உங்களைக் கொல்லுவேன்' என்று பயமுறுத்தி, உடனே தன்னுடைய வில்நாணில் டங்காரம் செய்தான்.

---

## 4. ராமர்தான் வீரனு?

இந்த சந்திரகேது யார்? அவன் ராமருடைய சகோதரனுன லக்ஷ்மணனின் புத்திரன். அவன் ஒரு ரதத்தில் ஏறிக்கொண்டு வந்தான். ரகுமகாராஜாக்களின் புகழ்பெற்ற சாரதியான சுமந்திரர் அதை ஓட்டிக்கொண்டு வந்தார். அவர்கள் அந்த ஆச்சிரமத்தின் அழகையும், நீரல்லிப் புஷ்பங்களுள்ள இனிமையான குட்டையையும், குன்றின் கீழ் ஓடும் ஓடையையும், வெள்ளி போன்ற சிறகுகளையுடைய அன்னப் பறவைகளையும், நர்த்தனம் புரிந்துகொண்டிருக்கும் மயில்களையும், பலவிதமான புஷ்பங்களால் நிறைந்த மரங்களையும், செடிகளையும், இவைகளுக்கிடையில், ஆச்சிரம மான் குட்டிகள் பாதத்தடியில் விளையாட அதிக பக்தியோடு கடவுளைத் துதித்துக்கொண்டிருக்கும் ரிஷிகளையும் பார்ப்பதற்கு அதிக ஆசைப்பட்டார்கள். இவை யெல்லாம் எவ்வளவு அமைதியாகக் காணப்பட்டன? இந்த ஆடம்பரமற்ற ரிஷிகளின் வாழ்வு எவ்வளவு பரிசுத்தமும், சந்தோஷமும் உள்ளது! இதுவன்றோ இன்பவாழ்வு.

அந்த அரச குமாரனும் அவனுடைய சாரதியும் தங்களுடைய பரிவாரமாகிய சிறு கூட்டம் இருக்கும் திசைக்குத் திரும்பினுர்கள். அதிக ஆவலோடு நோக்கிய அவர்களுடைய பார்வை என்ன காட்சியைக் கண்டது? சேனுவீரர்கள் நாலாதிசைகளிலும் ஓடிக்கொண்டிருந்தார்கள். சிலர் யுத்தபூமியில் ஏற்கனவே இறந்து கிடந்தார்கள். மற்றவர்கள் படுகாயமாக அடிக்கப்பட்டிருந்தார்கள். சிலருடைய கைகால்கள் முறிந்தன. அவர்கள் எல்லாரும் அதிகபயமடைந்தனர். நடுவில்

கையில் வில்லுடன் ஒரு சிறுபையன் நின்றுகொண்டிருந்தான். அவன் அவர்களை ஓட, ஓட, அடித்துக் கொண்டிருந்தான். ஒரு சிறுவன் இவ்வளவெல்லாம் செய்வது எவ்வளவு ஆச்சரியம்!

சந்திரகேது ஆச்சரியத்தால் பிரமித்துவிட்டான். சுமந்திரர் தனக்குள் 'இச் சிறுவன் விஸ்வாமித்திருடைய யாகத்தில் ராக்ஷஸர்களை ஹதம் செய்த பாலராமனை எனக்கு நினைப்பூட்டுகிறான். பாலியத்தில் ராமர் எப்படி இருந்தாரோ, அதுபோலவே இவனும் காணப்படுகிறான். இவன் யாராயிருக்கலாம்' என்று யோசித்தார்.

அடியுண்ட மனிதர்களில் ஒருவன் அவர்களிடம் ஓடி 'என் பிரபுக்களே, அதோ இருக்கும் லவன் என்னும் சிறுவன் நாங்கள் முன்போகவொட்டாமல் தடுத்துவிட்டான். தயவுசெய்து அவனுடைய துணிச்சலுக்காக அவனை நன்றாய்த் தண்டியுங்கள்' என்று சொன்னான். உடனே சந்திரகேது 'பராக்கிரமமுள்ள லவனே, அந்த பரிதாபமான மனிதர்களை விட்டுவிட்டு என்மேல் உன் அம்புகளைத் திருப்பு. உன்னோடு யுத்தம் செய்வது எனக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும்' என்று உரக்கக் கத்தினான். 'மேன்மை பொருந்திய ராஜகுமாரனே, சரியான காரியம் செய்தாய். நீ இக்ஷ்வாகு வம்சத்து உண்மையான புத்திரனைப்போல் பேசுகிறாய். என்னுடைய நடத்தையைப் பற்றி நான் லஜ்ஜைப்படுகிறேன்' என்று லவன் பதிலுரைத்தான்.

'சுமந்திரரே, நான் ரதத்திலிருந்து இறங்க உத்தரவு கொடுங்கள். லவன் பாதசாரியாக யுத்தம்

செய்யும்பொழுது நான் ரதத்திலிருந்து யுத்தம் செய்வது நியாயமல்ல' என்று சந்திரகேது சொன்னான்; இப் பெருந்தன்மையான வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே அவன் ரதத்தைவிட்டுக் கீழே இறங்கினான்.

'அழகிய ராஜகுமாரனே, நீ மிகவும் பக்ஷமுள்ளவனாய் இருக்கிறாய். நீ ரதத்திலிருந்து இறங்கினதற்காக நான் வருந்துகிறேன். நீ அதன் மேலேயே இருந்தால் நன்றாய் இருக்கும். சாரதியே, அவனை ரதத்தில் உட்கார்ந்து சண்டை செய்யச் சொல்' என்று லவன் சொன்னான். அதற்கு சுமந்திரர் லவன் பக்கம் திரும்பி 'நீ மற்றொரு ரதத்தில் ஏறிக்கொண்டால்தான் அவனும் ரதத்திலிருந்து சண்டை செய்வான்' என்று பதிலுரைத்தார். 'ஒவ்வொருவனும் அவனவனுக் குரிய ஸ்தானத்தில் இருக்கவேண்டும். நான் காட்டில் வளர்ந்தவன். அப்படிப்பட்ட உன்னத ஸ்தானங்கள் எனக்குப் பழக்கமற்றவை' என லவன் விடைபகர்ந்தான்.

'சூரிய வம்சத்தில் பெரிய அரசனான ராமரைப் பற்றி நீ கேள்விப்பட் டிருக்கிறாயா? உன்னைக் கண்டால் அவர் அதிக சந்தோஷமடைவார்' என சுமந்திரர் உரைத்தார்.

'அவர் பெரியவ ரென்றும், நல்லவ ரென்றும் சொல்லப்படுகிறது. அவர்மேல் யாதொரு விதத்திலும் எனக்குக் கோபமில்லை. ஆனால் குதிரையைத் தொடர்ந்து வந்த மனிதர்களின் கர்வமானது எனக்குக் கோபமுண்டாக்கியது. என்னுடைய நடத்தையைப் பற்றி நானே வெட்கமடைகிறேன். அவர்கள், பூமியில் ராமரைத் தவிர வேறு வீரர்கள் கிடையா

தென்ற எண்ணமுள்ளவர்களாகத் தோன்றினார்கள். அவர்கள் அவ்வளவு கடுமையாகப் பேசி யிருக்கக் கூடாது' என லவன் பதிலுரைத்தான்.

இதைக் கேட்டவுடன் சந்திரகேது 'என் பெரிய தகப்பனாரின் பெருமையைக் கேட்க உனக்கு சஹிக்க வில்லையா? எவ்வளவு ஆச்சரியம்!' என்று ஆச்சரியத் தோடு கூறி, லவனை நோக்கிச் சிரித்துப் பரிகாசம் செய்தான்.

'ராமர் நல்லவர், பெருந்தன்மையு முள்ளவ ரென்றுதான் நான் சொல்லுகிறேன். அவர் இப் பயல்களைப்போல் தற்புகழ்ச்சி செய்துகொள்ள மாட் டார் என்று நான் உறுதியாய் நம்புகிறேன். ராமர் பெரியவ ரென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். நான் அதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அவரைப் போல் வேறொருவரும் அவ்வளவு தைரியமாயிருக்க முடியாதா? உண்மையான க்ஷத்திரியன் உலகத்தில் வேறொருவனு மில்லையா?' என லவன் வினவினான்.

சுமந்திரர் கோபமடைந்து 'உன்னுடைய முட் டாள்தனமான உளறுபடையை நிறுத்து. தெய்விக முள்ள ராமருக்குச் சமம் யாரு மில்லை. நீ எங்க ளுடைய மனிதர்களைத் தோற்கடித்துவிட்டா யென்ப தில் சந்தேகமில்லை. இதனால் நீ ஒரு வீரனாய்விட் டாயா? பரசுராமரை ஜயித்தவரைப்பற்றி இப்படிக் கடுமையாகப் பேசாதே' என்று சொன்னார். சுமந் திரருடைய முகம் சிவந்தது. அவர் அளவுக்கு மிஞ் சிக் கோபமடைந்தார்.

'க்ஷத்திரியன்தான் சரீர பலமுள்ளவஞக இருக்க முடியும். பிராமணன் அப்படி யிருக்கமாட்டான். அவன் சதா படித்துக்கொண் டிருக்கவேண்டியவன் தான். பரசுராமன் ஒரு பிராமணன். அவன் தன் கடமையை அறியாதவன். ராமர் அவனைத் தோற் கடித்தாரென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். அதைச் செய்ய ஒரு யுத்தவீரன் வேண்டுமோ?' என்று லவன் சொன்ஞன். இதைக் கேட்டவுடன் சந்திரகேது அதிக வருத்தமடைந்து 'சுமந்திரரே, வாக்குவாதத் தை நிறுத்துவோம். இச் சிறுவன் ஸ்வர்க்கத்திலிருந்து இறங்கிய வீரனைப்போல் தோன்றுகிறது. பரசுராமர் கூட இவனுக்கு நிகரில்லை. ஒருகால் இவன் ராம ருடைய வீரச் செயல்களைப் பற்றிக் கேள்விப்படாமல் இருக்கலாம்' என்று சொன்ஞன்.

'ராமருடைய தைரியத்தை அறியாதார் யார்? ஆஞலும்......என்போன்ற சிறுவன் அதிகமாக ஒன் றும் சொல்லக்கூடாது. பெரியவர்களுக்கு விரோத மாக நான் ஒன்றும் சொல்லக்கூடாது. அவர்கள் மிக வும் பெரியவர்கள், மரியாதையு முள்ளவர்கள். என் போன்ற சிறுவன் அவர்களைப் பற்றிக் கெடுதலாக ஒன்றும் பேசக்கூடாது. ஸ்திரீயாகிய தாடகையின் வதம் ஒருவரைப் பெரியவராக்கப் போதுமானது. கரனை நியாய மில்லாதபடி எதிர்த்ததும், மறைவி லிருந்து வாலியைக் கொன்றதும் ஒரு பெரிய வீர னுக்குக் கீர்த்தியைத் தரத்தக்கவைதான்' என்று சொல்லி உரக்கச் சிரித்தான்.

'அடக்கமற்ற அயோக்கியனே, உடனே போய் விடு. இல்லாவிடில் நீ துன்பமடையும்படி நேரும்'

என்று சந்திரகேது கூறினன். அதற்கு லவன் 'நேசனே, ஏன் இவ்வளவு கோபம்? நான் உண்மையைப் பேசுகிறேன். நீ அதை விரும்பாததற்காக நான் வருத்தப்படுகிறேன்' என்று பதிலுரைத்தான். இரண்டு சிறுவர்களும் தங்களுடைய வில்லேயும் அம்புகளையும் கொண்டு யுத்தத்திற்கு ஆரம்பித்தார்கள். வயது சென்ற சுமந்திரர் ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டு நின்ருர்.

---

## 5. சிறு வீரர்களிருவருக்கும் சண்டை

இரண்டு பெரிய வீரர்கள்போல் லவனும் சந்திரகேதுவும் யுத்தம் செய்தார்கள். ஒரு சமயம் லவன் ஜெயிப்பது போலவும் மற்ருெரு சமயம் சந்திரகேது ஜெயிப்பது போலவும் தோன்றியது. அவர்கள் கடுமையாக யுத்தம் செய்துகொண் டிருந்தபொழுது ஒரு ஆச்சரியமான சம்பவம் நிகழ்ந்தது.

ஆகாயத்தில் ஒரு மின்னல் உண்டாயிற்று. அவர்கள் மேலே பார்த்தபோது ஏதோ ஒன்று கீழே வருவதைக் கண்டார்கள். அது ஒரு தங்க ரதம். அது வர வரக் கீழே பறந்துகொண்டு வந்தது. இக்காலத்தில் ஆகாய விமானங்கள் செல்வதுபோல் அக் காலத்தில் ரதங்கள் மேலே போகவும் கீழே வரவும் கூடும். ஒரு மனிதன் அதில் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அது யாராகு இருக்கக்கூடும்? நிச்சயமாக அவர் யாரோ ஒரு பெரிய மனிதனுக இருக்கவேண்டும். அந்தச் சிறுவர்க ளிருவரும் சண்டை செய்துகொண் டிருந்தார்கள். அந்த ரதம் பூமியை அடைந்தது. ஒரு

மனிதர் அதிலிருந்து வெளியில் வந்தார். அவர் ஒரு அரசனைப்போல் காணப்பட்டார். அவர் 'நில்லுங் கள், நில்லுங்கள், இனி சண்டை வேண்டாம்' என்று உரக்கக் கத்தினர். அவர்தான் சூரிய வம்சத்தில் பெரிய அரசரான ஸ்ரீராமர். சந்திரகேது தன் ஆயுதங்களைக் கீழே எறிந்தான். அவன் ஓடிப்போய் அரசரான தன் பெரிய தகப்பனரைக் கட்டிக்கொண் டான். லவன் அதிக வெட்க மடைந்தான். இப்போது அவன் மஹா வீரரான ஸ்ரீராமருக்கு முன்னல் நிற்கும் படி நேர்ந்தது. அவர் முன் இவன் அற்பனகக் காணப் பட்டான். எவ்வளவு முட்டாள்தனமாக அவன் கொஞ்ச நேரத்திற்கு முன்பு அவரைப்பற்றிப் பேசினன்.

'அவர் எவ்வளவு பெரியவராகவும் நல்லவ ராகவும் காணப்படுகிறர்' என்று அவன் தனக்குள் நினைத்தான். சந்திரகேது ராமரைப் பார்த்து 'பெரி யப்பாவே, இன்றைய தினம் எனக்கு நல்ல அதிர்ஷ் டம் வாய்த்தது. ஏற்கனவே எனக்கு சிநேகனய் விட்ட இத் தைரியமுள்ள பையனை நான் சந்தித்தேன். என்னை நடத்துவதுபோல் அவனையும் பக்ஷத்துடன் நடத்தவேண்டும்' என்று சொன்னன்.

ராமர் லவனைப் பார்த்தார். அவனுடைய நல்ல பார்வையைக் கண்டு மயங்கினர். அச் சிறு பையன் உண்மையான க்ஷத்திரியனய் வளருவான் என்று அவர் நினைத்தார். எப்படியோ அவ்னிடத்தில் அவ ருக்கு அன்பு ஏற்பட்டது. அவனை உற்றுநோக்கிக் கொண்டே நின்றர்.

'அவர் ராமாயணத்தின் கதாநாயக னில்லையா' என்று லவன் தன் சிநேகிதனைக் கேட்டான். சந்திர கேது 'ஆம்' என்று பதில் உரைத்தான். உடனே அச் சிறுவன் ராமரிடத்திற்கு ஓடி முழங்கால் படியிட்டு வணங்கினான். தன்னுடைய முரட்டுத்தனத்திற்காகத் தன்னை மன்னிக்கும்படி அவன் வேண்டினான். ராமர் லவனைத் தன் பக்கத்தில் இழுத்துப் பிரியத்துடன் முத்தமிட்டார்.

'உன்னுடைய சிநேகிதன் என்ன செய்திருக்கி ருன்' என்று ராமர் விசாரித்தார். சந்திரகேது அவன் யாகக்குதிரையைப் பிடித்துவிட்டதாகச் சொன்னான். அதைக் கேட்க ராமர் வெகு சந்தோஷ மடைந்தார். அவன் உண்மையான சிறு வீரன் என்று சொல்லி அவனை அடிக்கடி முத்தமிட்டார்.

பிறகு, அவர்கள் எல்லோரும் பக்கத்தில் இருந்த பாறையின்மேல் உட்கார்ந்தார்கள். தான் வந்திருப் பதை வால்மீகி ரிஷிக்குத் தெரிவிக்க, ராமர் சுமந்தி ரரை அனுப்பினர். அங்குள்ள மஹரிஷியின் ஆச்சிர மத்தின் காட்சி அவரை அதிக சந்தோஷப் படுத்தி யது. அவர்கள் சிலநேரம் பேசிக்கொண்டு உட்கார்ந் திருந்தார்கள்.

---

## 6. ஆச்சிரமத்தின் நிகழ்ச்சி

அதே சமயத்தில் வால்மீகி ரிஷியின் ஆச்சிரமத் தில் சில சம்பவங்கள் நிகழ்ந்துகொண் டிருந்தன. அங்கு அநேகம் விருந்தாளிகள் வந்திருந்தார்கள். அவர்கள் ஒருவர்பின் ஒருவராக வந்து சேர்ந்தார்கள்.

அவர்களுக்குச் சாப்பாடு போடுவதற்காக வால்மீகி
தன் சிஷ்யர்களைக் காட்டினுட் சென்று கிழங்கு
களும் கீரைத்தண்டுகளும் கொண்டுவர அனுப்பினார்.
காலைச் சாப்பாட்டிற்கு ஏராளமான பால் இருந்தது.
தன் விருந்தாளிகளுக்கு மேன்மையான விருந்து செய்
விக்க வேண்டு மென்பது அந்த ரிஷியின் விருப்பம்.
அரிசியும், காய் கறிகளும், கிழங்குகளும், பழங்களும்
சமைத்துப் பகல் சாப்பாட்டிற்கு பரிமாறப்பட்டன.

அந்த விருந்தாளிகள் யார்? அவர்களுக்கு மரி
யாதை செய்ய வால்மீகி யானவர் ஏன் அவ்வளவு
கவலை எடுத்துக் கொண்டார். அவர்கள் பெரிய
மனிதர்களாய் இருந்திருக்க வேண்டும். அநேகமாக
அவர்கள் அதற்குமுன் ஒருபோதும் அங்கு வந்திருக்க
மாட்டார்கள்.

ராமருடைய தாய்மார்கள் சீதை மறுபடியும்
காட்டிற்கு அனுப்பப்பட்டாள் என்று கேள்விப்
பட்டவுடன் அவர்கள் மறுபடி அயோத்திக்குச்
செல்ல விரும்பவில்லை. அவர்கள் வால்மீகியிடம் சென்
றார்கள். சீதை காட்டிற்கு அனுப்பப்பட்டு பன்னி
ரண்டு வருஷங்கள் ஆயின. அப்படி இருந்தும் அவர்
கள் அவளைப்பற்றி எப்போதும் நினைந்து நினைந்து
துக்கித் திருந்தார்கள். அவர்களுடைய பெரிய குரு
வாகிய வஸிஷ்டரும் அவர் மனைவி அருந்ததியும்
அவர்கள் பின் காட்டிற்குச் சென்றார்கள்.

நீங்கள் சீதையின் தகப்பனாரான ஜனகரைப்
பற்றிக் கேள்விப்பட் டிருப்பீர்கள். அவருக்கு

நான்கு பெண்மக்கள் இருந்தனர். அவர் எல்லாரையும் விடச் சீதையை அதிகமாக நேசித்தார். அவர் மிதிலைக்கு அரசர். அவர் பக்திக்காகவும், ஆடம்பரமற்ற வாழ்வுக்காகவும் புகழ் பெற்றவர். அவர் அதிக புத்திமானாகவும், கற்றவராகவும் இருந்தார். அவர் அரசராக இருந்தும், அவருடைய நல்ல குணத்தையும் பக்தியையும் உத்தேசித்து ஜனங்கள் அவரை ராஜரிஷி என்று அழைத்து வந்தார்கள். சீதையின் கதியைப் பற்றிக் கேள்விப்பட்டவுடன் ஜனகர் அதிக வருத்தமடைந்தார். அவள் இலங்கையில் இருந்த பொழுது அவளைப் பார்க்க அவர் அடிக்கடி ஆசைப் பட்டிருக்கிறார். அவள் அயோத்திக்குத் திரும்பி, அதன் ராணியானபொழுது அவர் அவளுடன் வெகு காலம் தங்கியிருந்தார். அவர் திரும்பிச் சென்ற சில நாட்களுக்குள், சீதை மறுபடியும் காட்டிற் கனுப்பப் பட்டாள் என்ற சங்கதி அவருக்கு எட்டிற்று. அவர் அதிக துக்கமடைந்தார். என்ன செய்வது என்று அவருக்குத் தெரியவில்லை. 'நான் சென்று ராமனுடன் யுத்தம் செய்யட்டுமா, அல்லது ராமனைச் சபிக்கட்டுமா' என்று கோபாவேசத்தோடு கூறினர். அக் காலத்தில் நல்லொழுக்கமுள்ளவர்களுடைய சாபமானது அதிக பயங்கரமானது. ஆனல் ஜனகர் ஒன்றும் செய்ய வில்லை. அவர் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார். ஆனல் சீதையைப்பற்றி ஒரு சமாசாரமும் அவருக்கு எட்டவில்லை. தன் புத்திரியானவள் காட்டு மிருகங்களால் கொல்லப்பட் டிருக்கவேண்டு மென்று அவர் தீர்மானித்தார். ஆயினும் இதனைக்கேட்டறியவேண்டு மென்று எண்ணி அவர் வால்மீகியிடம் சென்றார்.

## 7. சீதை வெளித் தோன்றுதல்

சீதையானவள், பூமியின் கீழ் ஒரு குகையில் தன் தாயான பூமிதேவியுடன் வசித்து வந்தாளென்று நான் முன்பு உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன். தன் குழந்தைகள் சிறுவர்களாயிருந்தபோதே அவர்களை அவள் வால்மீகி யிடம் அனுப்பி விட்டாள். அக் குழந்தைகள் அவளை விட்டுப் பிரிந்து ஏறக்குறைய ஏழு வருஷங்கள் ஆய்விட்டன.

ஒரு நாள் ஜானகி தன் குழந்தைகளைப் பற்றி நினைத்துக்கொண்டு தன் அறையில் உட்கார்ந்திருந் தாள். அவள் தோழியான தமஸை அவள் பக்கத் தில் உட்கார்ந்து ஏதோ வேலை செய்துகொண் டிருந் தாள். யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. தமஸை போய்க் கதவைத் திறந்தாள். பூமிதேவியின் தோழியான கங்கை உள்ளே வந்தாள். கங்கை, மேல் உலகத்தில் வசித்துவந்தாள். அவளைப் பார்க்கச் சீதை அதிக சந்தோஷமடைந்தாள். 'என் அன் பார்ந்த ஜானகி, நான் ஏன் வந்திருக்கிறேனென்று உனக்குத் தெரியுமா? உன் குழந்தைகள் உன்னை விட்டுப் பிரிந்து எவ்வளவு காலமாயிற்றென்று நீ எப் போதாவது நினைத்ததுண்டா? அவர்கள் போய் ஏழு வருஷங்களாய்விட்டன. அவர்களுக்கு நீ உபநயனம் செய்யவேண்டிய காலம் இதுதான்' என்று கங்கை சொன்னாள்.

ஆகையால் சீதை மறுபடி பூலோகத்திற்கு வர வேண்டி யிருந்தது. அவளுடைய ஹிருதயம் படபட வென்று துடித்தது. அவ்வளவு காலத்திற்குப் பிறகு

தன்னுடைய குழந்தைகளைப் பார்ப்பதில் அவளுக்கு மிகவும் சந்தோஷம்தான். ஆனால் தான் எதிலிருந்து வேண்டாமென்று விரட்டப்பட்டாளோ அந்த உலகத்திற்கு மறுபடியும் போக அவள் விரும்பவில்லை. ஆனால் அவள் இப்போது போகாமலிருக்க முடியாது. அவள் தன் தோழியான தமஸையைத் தன்னுடன் வரும்படி கேட்டுக்கொண்டாள். ஆகையால் அவர்கள் இருவரும் புறப்பட்டார்கள்.

அவர்கள் முதலில் தண்டகாரணியத்திற்கு வந்தார்கள். இதுதான் சீதையும் ராமரும் லக்ஷ்மணனோடு வெகுகாலம் வசித்து வந்த இடம். இப்போது சீதை தனியே அவ்விடத்திற்குச் செல்லலானாள். அவளுக்கு உண்டாகிய வருத்தத்துக்கு ஒரு அளவில்லை. அவள், முன் நடந்த காரியங்களையெல்லாம் நினைத்தாள். அவள் அறியாவண்ணம் அவள் கண்களி லிருந்து கண்ணீர் ததும்பிற்று.

“இதுதான் நானும் ராமரும் சேர்ந்தாப்போல் தூங்கின இடம். நாங்கள் இருவரும் உட்கார்ந்து வேடிக்கையாய் சம்பாஷித்துக்கொண் டிருந்த பாறை இதுதான். இங்குதான் லக்ஷ்மணன் நின்று காவல் காத்துக்கொண் டிருப்பான். நாங்கள் எல்லோரும் அப்போது எவ்வளவு சந்தோஷ முள்ளவர்களாக இருந்தோம்” என்று அவள் நினைத்தாள்.

அவள் நெடுந்தூரம் நடந்து பஞ்சவடிக்கு வந்து சேர்ந்தாள். அங்குதான் அவர்கள் முதலில் சூர்ப்பணகையைச் சந்தித்தது. சீதை, பொன்மான் வந்ததையும், அதைக் கண்டு தான் சுலபத்தில் மயங்கி

விட்டதையும் நினைத்துக்கொண்டாள். அவள் அந்த மானையும், அதைச் சேர்ந்த மற்றவைகளையும் சபித்தாள். ஆனால் அந்தத் துக்கத்தையெல்லாம் ஜெயித்தாய்விட்டது.

"நான் முன்னைவிட இப்போது அதிக கேவலமாயிருக்கிறேன். அப்போது என் துக்கத்திற்கு ஒரு முடிவு ஏற்பட்டது. இப்போதோ அதற்கு முடிவில்லைபோல் தோன்றுகிறது. தேவதைகள் என் விஷயத்தில் அதிக குரூரமா யிருக்கிறார்கள். என் வாழ்நாள் முழுவதும் துக்கத்தைத் தவிர வேறொன்றும் நான் அடையவில்லை" என்று மறுபடியும் தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

அப்படி யோசித்துக் கொண்டே சீதை மறுபடியும் போய்க்கொண் டிருந்தாள். தமஸை பின்னால் நடந்து சென்றாள். சீதை தான் முன் பார்த்திருந்த ஏரிகளையும், குட்டைகளையும், குன்றுகளையும், பள்ளத்தாக்குகளையும், ஆறுகளையும் பார்த்தாள். "அதோ என் யானைக் குட்டி ஓடுகிறது. அதை என் குழந்தை போல் நான் வளர்த்து வந்தேன். இப்போது அது மிகவும் பெரிதாக வளர்ந்து விட்டது. ஒருகால் இப்போது அது என்னை அறியாது" என்று அவள் சொன்னாள். பிறகு அதை அவள் பக்ஷத்துடன் அழைத்தாள்.

அந்த யானை திரும்பிற்று. அது அவளுடைய குரலை அறிந்துகொண்டாற்போல் காணப்பட்டது. அது அவளிடம் வந்தது. தான் செல்வமாய் வளர்த்த பிராணியைக் காண சீதை அதிக சந்தோஷ மடைந்தாள்.

அவள் அதற்கு சில பணியாரம் கொடுத்தாள். அவள் அதன் பெரிய துதிக்கையை மெதுவாய்த் தடவிக் கொடுத்தாள். அந்த யானை அதிக சந்தோஷ மடைந்த தாகக் காணப்பட்டது. பிறகு அதை அவள் அனுப்பி விட்டாள்.

வழியில் சீதை அனேகந் தடவை பெரு மூச்சுடன் கண்ணீர் விட்டாள். அவள் தோழி தமஸை அவளைச் சாந்தப்படுத்த முயன்ருள். தன் பிரபுவி னுடையவும், தான் அவரோடு சந்தோஷமாய்க் கழித்த வாழ்நாளுடையவும் நினைவு அடிக்கடி சீதைக்கு உண்டாயிற்று. அவள் வாழ்நாளினுள்ள ஒரே சந்தோஷம் அவளுடைய அன்பார்ந்த குழந்தைகள் தான். அவள், ராமரை மறந்து, தன் குழந்தைகளைப் பற்றி மாத்திரம் நினைக்க முயன்ருள். இவ்விதம் நினைத்துக் கொண்டும் பெருமூச்சு விட்டுக்கொண்டும் அவள் கடைசியில் வால்மீகியின் ஆச்சிரமத்தை அடைந்தாள். லவனும், சந்திரகேதுவும் ராமரால் சந்திக்கப்பட்ட பொழுது வால்மீகியின் ஆச்சிரமத்திற்கு வந்தவர்களுள் அவள் ஒருத்தி. ஆனல் வால்மீகி, அவள் மற்ற விருந்தாளிகளின் கண்களில் படாமல் இருக்கும்படி ஜாக்கிரதை யெடுத்துக்கொண்டார்.

---

## 8. ராமரும் இரட்டைப் பிள்ளைகளும்

நாம் இப்போது ராமரையும் அவ்விரு சிறுவர்களையும் பற்றிக் கவனிப்போம். அவர்கள் இன்னும் பேசிக்கொண்டு இருந்தார்கள். "நீ யார்" என்று ராமர் லவனைக் கேட்டார். "நாங்கள் வால்மீகியின்

சிஷ்யர்கள்" என்று லவன் பதில் சொன்னான். "உன்னுடைய தாயார் தகப்பனார் யார்? அவர்கள் எங்கு வசிக்கிறார்கள்" என்று ராமர் கேட்டார். "எங்களுக்குத் தெரியாது" என்று லவன் பதில் சொன்னான்.

ராமர் ஆச்சரிய மடைந்தார். அந்தப் பையன் மேல் அவர் இரக்கங் கொண்டார். அவனைப்பற்றி இன்னும் அதிகமாய் அறிய அவர் விரும்பினார். அச் சாதாரணமான குழந்தையினிடம் தனக்கு அதிக அன்பு இருப்பதாக அவர் உணர்ந்தார். "நீ அடிக்கடி நாங்கள், நாங்கள்! என்று பேசுகிறாயே. நீங்கள் எத்தனை பேர்" என்று அவர் கேட்டார். அதற்கு லவன் "நாங்கள் இரட்டைப் பிள்ளைகள். என் சகோதரனுக்குக் குசன் என்று பெயர். அவன் என்னைவிட மூத்தவன்" என்று பதில் சொன்னான். குசன் எங்கே என்று ராமர் மறுபடியும் கேட்டார்.

"அவன் சங்கீதத்திற்கும் கவிக்கும் தகப்பனான பரதரிடம் அனுப்பப்பட் டிருக்கிறான். எங்கள் குரு வால்மீகி ரிஷி, ஒரு நாடகம் எழுதி அதை என் தமயன் வசம் பரதருக்கு அனுப்பி இருக்கிறார். அது தடங்க லில்லாமல் வெற்றியுடன் முடிவு பெறும் என்று தீர்மானித்த பிறகுதான் அதை நடித்துக் காட்ட அவர் விரும்புகிறார்.

அந்த நாடகம் யாதாயிருக்கக் கூடுமென்றும், இந்த சகோதரர்கள் யாரென்றும் ராமர் வியப்புடன் ஆலோசனை செய்யலானார். அச் சமயத்தில் யாரோ லவனை அழைப்பதை அவர்கள் கேட்டார்கள். அவர்கள் அதைக் கவனத்துடன் கேட்டார்கள். "அது

என் சகோதரனுடைய குரல். அவன், தான் சென்ற காரியத்திலிருந்து இப்போதுதான் திரும்பி வருகிறான். நான் ஓடிப்போய் அவனை இங்கே அழைத்து வருகிறேன்'' என்று சொல்லி லவன் வெளியே ஓடினான்.

லவன் சீக்கிரமாகத் தன் சகோதரனோடு திரும்பி வந்தான். அந்த அன்னியர்கள் இன்னாரென்றும், தான் அவர்களோடு பேசிக்கொண்டிருந்தது இன்னதென்றும், அவன் குசனுக்குச் சொன்னான். குசன் முன்னால்வந்து ராமரால் பிரியத்துடன் வரவேற்கப் பட்டான். ரகுவம்சத்து மஹானான ராமருடைய முன்னிலையில் குசனுக்குப் பயத்தால் உடல் சிலிர்த்தது. ராமர் இரண்டு சகோதரர்களையும் பார்த்தார். அவர்களுடைய பார்வையைக் கண்டு அவர் மயங்கினர். அவர்கள் இருவரும் ஒரே மாதிரி காணப்பட்டார்கள். அவர்கள் இருவரிலும் அவரால் சுலபமாய் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. குசனுடைய புருவம் லவனுடையதைவிட மயிர் அடர்ந்ததென்றும், குசன் லவனைவிடக் கொஞ்சம் உயரமானவனென்றும் தெரிந்துகொள்ள நிரம்ப கவனித்துப் பார்க்க வேண்டியிருந்தது. ஆனால் கண்கள், மூக்கு, கன்னங்கள், நெற்றி முதலியவைகளெல்லாம் ஒரே மாதிரியா யிருந்தன. அவர் எப்படியோ தனக்குப் பட்டமஹிஷியா யிருந்த சீதையைப் பற்றி நினைக்க ஆரம்பித்தார். அவ்விரு சிறுவர்களின் முகங்களிலும் அவளுடைய பிம்பம் இருப்பதாக அவருக்குத் தோன்றியது. அவர் மனத்திற்குள்ளாகவே

அழுதார். அவருடைய கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் வருவது தெரிந்தது.

"ஐயா, தாங்கள் எவ்வளவு வருத்தமாகக் காணப் படுகிறீர்கள்; தாமரைப் புஷ்பத்தைப் பனித் துளிகள் கெடுப்பது போல் உங்கள் முகத்தின் தேஜஸைக் கண்ணீர்த் துளிகள் கெடுக்கின்றன" என்று லவன் ஆச்சரியத்தோடு கூறினன். "சும்மா இரு" என்று குசன் அவனைக் கோபித்துக் கொண்டு, "உனக்கு ராமாயணக் கதை தெரியாதா? ஜானகி இல்லாமல் ராமருக்கு என்ன சுகம் இருக்கிறது?" என்று சொன்னன்.

அவ்வளவு சாதாரணமாகவும், சூது வாதில்லாமலும் இருப்பதற்காக, ராமர் அச்சிறுவர்களிடம் பிரியம் கொண்டார். அவர் ராமாயணத்திலிருந்து கவிகளைச் சொல்லும்படி அவர்களைக் கேட்டார். வால்மீகி கதையை எப்படிச் சொல்லி யிருக்கிறுரென்று அறிய ஆவல் கொண்டார்.

"அந்த ரிஷி எழுதியிருப்பவை எல்லாம் எங்களுக்குப் பாராமல் தெரியும். எங்கள் நினைப்பிற்கு வருகிற பாட்டுகளை நாங்கள் சொல்லுகிறேம்" என்று குசன் சொன்னன். "ராமருடைய தகப்பனருக்கு சீதை யிடம் அதிகப் பிரியம் ஏற்பட்டபடியால், ராமருக்கும் அவளிடம் அன்பு அதிகமாயிற்று. அவள் அதிக நல்லவளாகவும், அழகுள்ளவளாகவும் இருந்தபடியால் அவள் இரண்டு விதங்களில் ராமருக்குப் பிராணன் போன்றிருந்தாள். அதுபோலவே சீதை ராமனைத் தன் பிராணன்போல் நேசித்து வந்தாள்.

அவர்களுக்குள் இருந்த அன்பு அவர்கள் மனத்திற்குத்தான் தெரியும்" என்னும் அர்த்தமுள்ள பாட்டைப் பாடினான்.

"வாஸ்தவத்தில் அப்படியேதான்! அவனுடைய அன்பானது மனத்திலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக வெளிப்பட்டு என்னுடைய மனத்தைச் சந்தோஷத்தால் நிரப்பிற்று. அவனுடையமுடிவு எவ்வளவுகொடூரமானது!" என்று ஆச்சரியத்தோடு ராமர் கூறினார்.

அச் சகோதரர்கள் பாடிக்கொண்டே இருந்தார்கள். ராமர் பெருமூச்சு விட்டுக்கொண்டும் கண்ணீர் விட்டுக்கொண்டும் இருந்தார். வால்மீகி, ஜனகர் முதலியவர்கள் சிறியவனான லவன் செய்திருக்கும் வீரச்செயல்களைத் தங்கள் கண்களால் பார்க்க விரும்பினார்கள். இங்கு வந்ததும் ஸ்ரீராமரைக் கண்டு சந்தோஷ மடைந்தார்கள். வால்மீகி ரிஷி இவர்களை அழைத்துக் கொண்டு தன் ஆச்சிரமத்திற்கு வந்தார்.

---

## 9. அறிந்துகொள்ளலும் மீளக் கூடுதலும்

தன் புகழ் பெற்ற விருந்தாளிகள் சந்தோஷமாய்ப் பொழுது போக்குவதற்காக, தான் புதிதாய் எழுதியிருக்கும் நாடகத்தை நடித்துக்காட்ட உத்தேசித் திருப்பதாக வால்மீகி ரிஷி கூறினார். ராமருடைய சகோதரனான லக்ஷ்மணன் நாடக மேடை தயார் செய்தான். நாடகமேடை கங்கை நதிக்கருகில் நிர்மாணம் செய்யப்பட்டது. விருந்தாளிகள் எல்லோரும் அந்த நாடகத்தைப் பார்ப்பதற்காக

அவரவர்கள் இடங்களில் அமர்ந்தார்கள். லவனும், குசனும், சந்திரகேதுவும் ராமருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார்கள்.

திரை தூக்கப்பட்டது. நாடகம் ஆரம்பமாயிற்று. "ஐயோ, என் அன்பார்ந்த ராமரே, சிநேகிதனுன லக்ஷ்மணு, நீங்கள் என்னைத் தனியாய் இவ் விருண்ட காட்டில் விட்டுவிட்டீர்கள். இங்குள்ள காட்டு மிருகங்கள் என்னைத் தின்றுவிடும். நான் கங்கையில் விழுந்து அத் தேவதையின் உதவியை வேண்டுவேன். வேறு வழியில்லை" என்று ஒரு சத்தம் புறப்பட்டது. "அது சீதையின் குரல்; நில்! நில்; கொஞ்சம் பொறு, நான் ஓடி வந்து உனக்கு உதவி செய்கிறேன்" என்று ராமர் சத்தம் இட்டார். அவர் அவசரமாய் எழுந்து ஓடப் புறப்பட்டார். ஆனுல் லக்ஷ்மணன் அவர் கையைப் பிடித்து, "இது ஒரு நாடகந்தான், உண்மையல்ல" என்று சொல்லி அவரை நிறுத்தினன். "ஆ, என் கண்மணியே, இதெல்லாம் கொடுமையான ராமனுடைய செய்கை" என்று ராமர் வருத்தத்தோடு சொன்னுர்.

திடீரென்று கங்கையின் ஜலத்தில் ஒரு அசைவு உண்டாயிற்று. ஆச்சரியம்! அதிலிருந்து இரண்டு அழகிய தேவதைகள் வெளிக்கிளம்பினுர்கள். அவர்கள்தான் கங்கையும், பூமியும். அவர்களிருவரும் சீதையைப் பிடித்துக் கொண்டார்கள். "சீதையே, மனதைச் சமாதானப் படுத்திக்கொள். நீ இப்பொழுது இரண்டு குழந்தைகளுக்குத் தாயாய் விட்டாய்" என்று சொன்னுள் கங்கை.

"தாயே என்னை உன்னிடம் சேர்த்துக்கொள். என்னுடைய வாழ்க்கையைப் பற்றி நான் லஜ்ஜைப் படுகிறேன்" என்று சீதை சொன்னாள். பூமாதேவி அவளைச் சமாதானப்படுத்தி, அக்குழந்தைகளுக்காகக் கொஞ்ச காலம் பொறுத்துக்கொள்ளும்படி அவளை வேண்டினாள். "இத் தகப்பனில்லாப் பிள்ளைகளால் என்ன நன்மை?" என்று சீதை கேட்டாள். "அவர்கள் தங்கள் தகப்பனாரை மறுபடியும் அடையக் கூடிய காலம் வரும். தைரியத்தைக் கைவிடாதே" என்று இருதேவதைகளும் சொன்னார்கள்.

ராமர் மௌனமாய் உட்கார்ந்திருந்தார். இதெல்லாம் எப்படி முடியப்போகிறதென்று பார்க்க அவர் ஆவல் கொண்டார். அடிக்கடி, அவர் உதடுகள் அசைவது தெரிந்தது. கலவரத்தினால் அவருக்கு மயக்கம் அதிகப்பட்டது. தன் முன்னால் அவர் கண்ட காட்சி அவர் மனதை அவ்வளவு இளகச் செய்தது. அவ்விரு குழந்தைகளையும் உண்மையான க்ஷத்திரியர்களாய் எப்படி வளர்ப்பதென்றும், அவர்களுக்கு யார் பாடம் கற்றுக் கொடுப்பதென்றும் சீதை கேட்டாள். 'அவர்கள், அக்குழந்தைகள் தாயை விட்டுப் பிரிந்திருக்கக் கூடிய தருணம் வந்தவுடன், அவர்களை வால்மீகியிடம் அழைத்துப் போகவேண்டுமென்றும், அவர்தான் அவர்களுக்கேற்ற குரு என்றும் சொன்னார்கள். பிறகு கங்கையின் தண்ணீர், மத்தியில் பிரிந்தது. அவர்கள் மூவரும் அதன் வழியாகக் கீழே சென்றார்கள். உடனே திரைபோடப்பட்டது.

பிறகு ராமர், லவனும் குசனும் தன் குழந்தைகளாகத்தான் இருக்க வேண்டுமென்று சுலபமாய் ஊஹித்தார். லக்ஷ்மணனும் அப்படியே நினைத்தான்.

திடீரென்று அவர்கள், "நதியிலிருந்து கர்ஜனை போன்ற ஒரு சத்தத்தைக் கேட்டார்கள். அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்கு முன் கங்கை நதி ஓடிக் கொண்டிருந்தது என்று நான் சொன்னேன். பெரிய அலைகள் கிளம்பிக் கரைகளின்மேல் பலமாய் மோதின. நடுஜலத்தில் ஒரு சத்தம் கேட்டது. இரண்டு ஜல தேவதைகள் அதிலிருந்து வெளி வந்தார்கள். அதே சமயத்தில் தேவர்களின் கூட்டம் ஆகாயத்தில் நிறைந்திருந்தது. சீதையும், தமஸையும் ஒரு மூலையிலிருந்து திடீரென்று அங்கு வந்து சேர்ந்தார்கள். உடனே ஜலதேவதையான கங்கை, முன்வந்து "ஓ தேவர்களே, சீதை குற்றமற்றவளென்பதற்கும் அவள் எவ்வளவு குரூரமாய் நடத்தப்பட்டாளென்பதற்கும், நீங்கள் சாட்சி. அவள் பரிசுத்தமாயும், பெருந்தன்மையாயும், பதிவிரதையாயும் இருப்பது உங்களுக்குத் தெரியவில்லையா? ஓ, அயோத்தியாபுரி வாசிகளே, ராமர் மறுபடி சீதையை ஏற்றுக்கொள்ள நீங்கள் உத்தரவு கொடுக்கமாட்டீர்களா?" என்று உரக்கக் கத்தினாள்.

உடனே தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். ஜனங்களெல்லாரும், "ராமா, உமக்கு மங்களமுண்டாகுக. அன்னை சீதையை மறுபடி ஏற்றுக்கொள்ளும். அவள் எவ்வளவு பெருந் தன்மை பொருந்தியவளாயும் சற்குணவதியாயுமிருக்கிறாள்! அவள் இல்லாமல் உலகம் ஒரு பாலைவனம் போல் இருக்கிறது" என்று சத்தமிட்டார்கள்.

மஹா பதிவிரதையான அருந்ததி ஜானகியின் கையைப் பிடித்து அவளுடைய கணவன் கையோடு

சேர்த்து வைத்தாள். லவனும், குசனும் தங்களுடைய பெற்றோர்கள் யார் என்பதை இப்போது அறிந்து ஓடிப்போய் அவர்களை முத்தமிட்டார்கள். எல்லோரும் சந்தோஷமா யிருந்தார்கள்.

ராமரும் சீதையும் வால்மீகியினுடைய ஆச்சிரமத்தில் பின்னும் சிலநாள் தங்கியிருந்தார்கள். பிறகு அவர்கள் பராக்கிரமமுள்ள தங்கள் புதல்வ ரிருவரையும் அழைத்துக்கொண்டு அயோத்திக்குப் புறப்பட்டார்கள். தங்கள் அரசன் ராணியோடும் இரண்டு குமாரர்களோடும் திரும்பி வருவதைக்கண்ட ஜனங்கள் மகிழ்ந்தார்கள். தெருக்களெல்லாம், புஷ்பங்களாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு அழகாயிருந்தன. எங்கும் வாத்தியங்களின் சத்தமும், சங்கீதத்தின் சப்தமும் நிறைந்திருந்தன. பிறகு அனேக வருஷகாலம் ராமர் சந்தோஷமாய் அரசாட்சி செய்தார். பிறகு ராஜ்யத்தைத் தன் புத்திரர்கள் ஆளும்படி விட்டுவிட்டார். தங்களுடைய சாமர்த்தியமான ஆளுகையால் குசனும், லவனும் தங்களுடைய பிரஜைகளைச் சந்தோஷப்படுத்தினார்கள். ஜனங்கள் அவர்களிடம் சந்தோஷமடைந்து அவர்கள் வெகுகாலம் ஜீவித்திருந்து தங்களை ஆளும்படியாய்க் கடவுளை நோக்கிப் பிரார்த்தனை செய்தார்கள்.



Printed at the Caxton Press, Madras.—1925 (A)

# பொருளடக்கம்





## நீதிபோதக்கிரந்தமாலை

(சித்திரப் படங்க ளமைந்தது)

—o—

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| 1. விவேக சந்திரிகை (முதற் பாகம்) | 0 | 7 | 0 |
| 2. விவேக சந்திரிகை (இரண்டாம் பாகம்) | 0 | 8 | 0 |
| 3. விவேக சந்திரிகை (மூன்றும் பாகம்) | 0 | 12 | 0 |

## ஆசாரிய சரித்திர மாலை

(ஆசாரியர்களின் திருவுருவப் படங்க ளமைந்தது)

1. ஸ்ரீ வேத வியாசர்
2. ஸ்ரீமத் சங்கராசாரியர்
3. ஸ்ரீமத் ராமாநுஜாசாரியர்
4. ஸ்ரீ மத்வாசாரியர்
5. ஸ்ரீ வல்லபாசாரியர்
6. ஸ்ரீ கிருஷ்ண சைதனியர்
7. ஸ்ரீ வித்தியாரணியர்
8. ஸ்ரீ வேதாந்த தேசிகர்

ஆகிய எட்டுச் சரித்திரங்க ளடங்கியது. விலை, அணு 12

A·1

## பக்த சிரோமணிகள் சரித்திரச் சுருக்கம்

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| திருநாவுக்கரசர் .. ... ... | 0 | 1 | 0 |
| சுந்தரமூர்த்திகள் ... ... | 0 | 1 | 0 |
| சம்பந்தர் ... ... ... | 0 | 2 | 0 |
| மாணிக்கவாசகர் ... ... | 0 | 2 | 0 |
| மார்க்கண்டேயர் ... ... | 0 | 2 | 6 |
| தாயுமானவர் ... ... ... | 0 | 1 | 0 |
| திருவெண்காடர்... ... ... | 0 | 4 | 0 |
| நந்தனர் ... ... ... | 0 | 4 | 0 |
| இராமானுஜர் ... ... ... | 0 | 1 | 0 |
| சங்கராசாரியார் ... ... | 0 | 4 | 0 |
| திருமங்கை மன்னன் ... ... | 0 | 2 | 0 |
| நம்மாழ்வார் ... ... ... | 0 | 2 | 0 |
| குலசேகராழ்வார் ... ... | 0 | 2 | 0 |
| தொண்டரடிப்பொடி ஆழ்வார் ... | 0 | 2 | 0 |
| துருவ ப்ரஹ்லாதர் ... ... | 0 | 4 | 0 |
| திருப்பாணுழ்வார் ... ... | (அச்சில்) | | |
| ஸ்ரீமந் நாதமுனிகள் ... ... | ,, | | |
| நால்வர் சரித்திரம் ... ... | 0 | 8 | 0 |
| ஆழ்வாராதிகள் சரித்திரம்... ... | 0 | 8 | 0 |
| சதி அனசூயா ... ... ... | 0 | 8 | 0 |
| சுலோசனு ... ... ... | 0 | 6 | 0 |

வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்,

புத்தக வியாபாரிகள்,

சென்னை.